6th March 1961]

கிறது என்பதையெல்லாம் ரெகார்டு செய்து கொள்ளுகிறார்கள். அதனுடைய மாதாந்திர சராசரியை எடுத்து விலை என்ன என்று நிர்ணயிக்கப்படுகிறது. இது ஜனவரி மாதத்தில் பார்த்தது. ஜனவரி மாதத்தில் அரிசி விலை குறைந்ததைவிட மிளகாய் விலை குறைவாக குறைந்திருக்கிறது என்று கண்டிருக்கிறது. அது தான் நிலைமை.

**Sri N. K. PALANISAMI :** விலைவாசி ஏறுவதற்குத் தகுந்த மாதிரி போன வருஷம், சம்பளம் வாங்கக்கூடியவர்களுக்கு கொஞ்சம் அதிகமாக சம்பளம் கொடுக்கப்பட்டது. மறுபடியும் விலைவாசி புள்ளி அதிகமாக ஏறிவிட்டது. இங்கிலாந்தில் இருப்பதைப்போல் எந்த அளவிற்கு விலைவாசி புள்ளி ஏறுகிறதோ அந்த அளவிற்கு 'ஆடோமாடிகாக' 'டியர்னஸ் அலவன்ஸ்'-ஐ உயர்த்திக் கொடுக்கப்படுகிறமாதிரி, எந்த அளவிற்கு விலைவாசிகள் ஏறுகிறதோ அந்த அளவிற்கு புள்ளிவிவரத்திற்கு தகுந்தமாதிரி இங்கும் பஞ்சப்படி கொடுக்க சர்க்கார் முயற்சி எடுக்குமா ?

Mr. SPEAKER : How does this arise from the main question? If the Hon. Minister is prepared to answer, I have no objection.

The Hon. Sri R. VENKATARAMAN : I want your indulgence for answering this question since I want to clear a misapprehension.

**Mr. SPEAKER :** All right.

**The Hon. Sri R. VENKATARAMAN :** இன்றைக்கு நம்முடைய நாட்டில் விலைவாசிக்குத் தகுந்த மாதிரி அந்த அளவிற்கு பஞ்சப்படி கொடுக்கப்படுகிறது. ஒரு புள்ளிக்கு 3 அணு விதம் சென்னை ராஜ்யத்தில் கொடுக்கப்படுகிறது. கடந்த டிசம்பர் மாதத்தில் புள்ளி ஏறிய பொழுது தொழிலாளர்களுக்கு ரூ. 2, 1-12-0 அளவிற்கு உயர்ந்தது. அதைப் போலவே புள்ளி குறைகிறபொழுது, அவர்களுக்கு பாயிண்டுக்கு 3 அணு அளவிற்கு குறையும். கனம் அங்கத்தினர் அவர்கள் ஏறினால் கொடுக்க வேண்டும், இறங்கினால் குறைக்கக்கூடாது என்று சொல்லுவார்களேயானால் அந்த வாதத்தை பொதுவாக ஒத்துக்கொள்ள முடியாது என்பதை எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும்.

*Adulteration (milk)*

*** 591 Q.—Sri S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ல் பாலில் தண்ணீரைக் கலந்து விற்றதாக எத்தனை பேர் தண்டிக்கப்பட்டனர் ?

The Hon. Sri M. A. MANICKAVELU : 1,526 persons.

**Sri S. M. ANNAMALAI :** இதில் எவ்வளவு பணம் வசூலிக்கப்பட்டது என்று சொல்ல முடியுமா? எந்தெந்த நகரங்களில் எவ்வளவு பேர்கள் தண்டனை அடைந்தார்கள் என்று சொல்ல முடியுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : The total amount of fines levied is Rs. 18,115.

SRI K. VINAYAKAM : Since adulteration of milk with water has become a common feature in the City of Madras, what steps do the Government propose to take to strengthen the machinery for detecting these offences more than what is being done in this connection by Corporation officials?

THE HON. SRI M. A. MANICKAVELU : As far as the City is concerned, the test is done in the laboratory where facilities are afforded by the Corporation. As regards mofussil areas, it is done at the King Institute, Guindy. Facilities there are not adequate. We are trying to increase the facilities. As regards other preventive steps to be taken, now there is increase in scope of punishment from one year imprisonment or fine to four years' imprisonment or fine.

*Transferred villages.*

* 592 Q.—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN) : *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) சித்தூர் ஜில்லாவிலிருந்து குடியாத்தம் தாலுகாவில் சேர்ந்துள்ள பாதராமி கிராமத்தில் சுத்து வட்டாரப் பகுதிகள் ரொம்பவும் மோசமான, பின்தங்கிய நிலையிலுள்ளது சர்க்காருக்குத் தெரியுமா ?*

*(இ) அதற்காக சர்க்கார் மேற்கொண்டுள்ள திட்டமென்ன ?*

*(உ) இதுவரை என்ன செய்யப்பட்டது ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes Sir.

(*b*) & (*c*) Efforts are being taken for providing amenities such as drinking water facilities, school buildings, formation of roads, etc., to the villages in the transferred area. With the extension of the provisions of the Madras Panchayats Act, 1958 to this area, it is expected that the backwardness of the area will be remedied early.

SRI K. VINAYAKAM : Sir, may I know whether any efforts are being taken in this connection to locate a Block Development Office and bring that area under the Block Development Scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, in due course that also will be done.

*Kurichi Panchayat*

* 593 Q.—SRI N. MARUDACHALAM : *கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) கோவை குறிச்சி மேஜர் பஞ்சாயத்தை 1958-ல் சர்க்கார் முனிசிபாலிட்டியாக அறிவிக்கப்பட்டதா ?*

*(இ) 1960-ல் மேற்படி முனிசிபாலிட்டியை மீண்டும் பஞ்சாயத்தாக அறிவிக்கப்பட்டதற்கு காரணம் என்ன ?*